# பாரதியும் பாப்பாவும்



பெ.தூரன்





பாரதியார் தமிழ்நாட்டை தட்டியெழுப்பி சுதந்திரப் போரில் ஈடுபடும்படி செய்தார். அவருடைய வாழ்க்கை வரலாற்றை குழந்தைகள் தெரிந்துகொள்ளவேண்டியது அவசியம். அதோடு அவர் குழந்தைகளுக்காக எழுதிய பாப்பா பாட்டையும் கற்றுக் கொள்ளவேண்டும். அப் பாட்டில் பாரதியார் நமக்கு வேண்டிய பல நீதிகளைச் சொல்லியிருக்கிறார். ஆகையால் அதை மனப்பாடம் செய்துகொண்டு, அதன்படி நடக்கவேண்டும். அதற்கு இந்த புத்தகம் மிக நல்ல உதவியாக இருக்கும். படித்துப் பாருங்கள்.

## ஆசிரியரைப் பற்றி

ம. ப. பெரியசாமித் தூரன் (பெ. தூரன்) குழந்தைகளுக்கும், சிறுவர் சிறுமியருக்கும் கதை சொல்வதில் புகழ் பெற்றவர். பல உயர்நிலைப் பள்ளிகளிலும், சென்னை வானொலியிலும் எத்தனையோ சிறுகதைகளும், நீண்ட கதைகளும் அவர் சொல்லும்போது இளைஞர்கள் ஆவலோடு கேட்பார்கள். அவர் கூறிய கதைகளெல்லாம் புத்தக வடிவில் வெளிவந்துள்ளன. குழந்தைகளுக்குப் பாடல்கள் எழுதுவதிலும் அவர் வல்லவர். ''நல்ல நல்ல பாட்டு'' என்ற அவருடைய பாடல் தொகுப்பிற்குத் தமிழ்நாடு அரசு பரிசு வழங்கியுள்ளது. பரிசும், கேடயமும் வழங்கி குழந்தை எழுத்தாளர் சங்கமும் அவரை கௌரவித்துள்ளது. குழந்தைகளுக்கும் பெரியவர்களுக்கும் அவர் எழுதிய நூல்கள் ஐம்பதிற்கு மேலிருக்கும்.

விலை ரூ 5.00

ஓவியர்கள்: மாருதி, எஸ். கே. ராமானுஜம் (ரானு)

**M** **The Macmillan Company of India Limited**
21 PATULLO ROAD, MADRAS 600 002

# பாரதியும் பாப்பாவும்

கும்பகர்ணன் கதை உங்களுக்கெல்லாம் தெரியுமோ இல்லேயோ?

கும்பகர்ணன் ஆறுமாதம் சேர்ந்தாற்போல் தூங்குவானும். யாருமே அவனே எழுப்ப முடியாதாம், என்ன செய்தாலும் சரி அவன் காதுக்குள்ளே இடி இடித்தாலும் சரி அவன் தூக்கம் கலேயாதாம்!

இந்தக் கும்பகர்ணனேப் போலத்தான் நம்ம தமிழ் நாடு தூங்கிக் கொண்டிருந்தது. தமிழ் நாட்டு மக்கள் சுமார் அறுபது எழுபது ஆண்டுகளுக்கு முன்னே இப்படித்தான் தூங்கிக் கொண்டிருந்தார்கள்.

தூங்கினுர்கள் என்ருல் உண்மையாகவே தூங்கவில்லே. இரவிலே தூங்குவதும், பகலிலே விழிப்பதுமாகத் தானிருந்தார்கள்.

ஆனுல் அந்தக் காலத்திலே மக்கள் அந்நிய நாட்டாருக்கு அடிமைகளாக இருந்தார்கள். நமது இந்தியாவில் வெளிநாட்டாரின் அரசாட்சி நடந்து கொண்டிருந்தது. ஆங்கிலேயர் இந்தியாவை அடிமையாக வைத்திருந்தார்கள். இன்று நமக்கு சுதந்திரம் இருப்பதுபோல அன்று வாழ்ந்த இந்திய மக்களுக்கு சுதந்திரம் இருக்கவில்லே.

நமது நாட்டின் முன்னேற்றத்திற்காக நாம் நமது சட்டசபைகளில் விருப்பமான சட்டங்களே இப்பொழுது

நிறைவேற்றிக் கொள்ளலாம். அவற்றை நடைமுறையில் கொண்டுவந்து மக்களுக்கு நன்மை செய்யலாம். அதற்கு நமக்கு சுதந்திரம் இன்று இருக்கிறது.

1947ஆம் ஆண்டுக்கு முன்னால் அப்படியில்லை. சுமார் இருநூறு ஆண்டுகளுக்கு மேல் ஆங்கிலேயர் அரசாங்கம் இங்கு நடந்து கொண்டிருந்தது. ஆங்கிலேயர் தங்களுடைய நன்மைக்கு என்ன வேண்டுமோ அப்படியெல்லாம் சட்டம் செய்திருந்தார்கள். இந்தியாவின் செல்வமெல்லாம் வெளி நாட்டிற்குக் கோடி கோடியாகச் சென்று கொண்டிருந்தது.

இந்தியாவில் மக்கள் வறுமையால் வாடினார்கள். பஞ்சத்தாலும் நோயாலும் லட்சக்கணக்காக மடிந்தார்கள். அப்பொழுது வாழ்ந்த நமது மக்கள் பேசாமல் ஆடு மாடுகளைப் போல சகித்துக் கொண்டிருந்தார்கள். ஆடு மாடுகளாவது சில சமயங்களில் பாய்ந்து கொல்ல வரும். நமது மக்களால் அதைச் செய்யவும் முடியவில்லை. நம்மால் என்ன செய்ய முடியும் என்று தலையைக் குனிந்து கொண்டிருந்தார்கள்.

இப்படி இருந்தால் மக்கள் தூங்கிக் கொண்டிருந்தார்கள் என்று சொல்லத்தானே வேண்டும்? முப்பது கோடி மக்களை சுமார் இரண்டு லட்சம் வெள்ளையர் ஆண்டார்கள்!

தானியம், கிழங்குகள், பழம் இவை யெல்லாம் நமது நாட்டிலே நிறைய உண்டு. அதனால் தான்

கனியும் கிழங்கும் தானியங்களும் கணக்கின்றித்
தரும் நாடு—நித்தம் நித்தம் கணக்கின்றித்

தரும் நாடு என்று இந்திய தேசத்தைப் புகழ்ந்து பாரதியார் பாடியிருக்கிறார்.

இந்த உலகத்திலேயே இந்தியாதான் நல்ல நாடு என்கிறார் அவர்.

பாருக்குள்ளே நல்ல நாடு—எங்கள்
பாரத நாடு.

என்று போற்றுகிறார்.

இந்த பாரதியார்தான் தமிழ் மக்களைப் பார்த்துக் கும்பகர்ணனைப் போலத் தூங்குகிறீர்களே, எழுந்திருங்கள் என்று தட்டி எழுப்பினார்.

அவர் பாடிய பாடல்களைக் கேட்டுத் தமிழ் மக்கள் விழித்துக் கொண்டார்கள். நமக்கு விடுதலை வேண்டும்



அதற்காக நாங்கள் போராடத் தயாராக இருக்கிறோம் என்று உற்சாகமாக எழுந்தார்கள். இந்தியாவின் மற்றப் பகுதிகளில் உள்ள மக்களும் இவ்வாறு விழிப்படைந்து எழுந்தார்கள்.

எங்கள் நாடு பழம் பெருமை வாய்ந்தது. இதன் கோயில்கள், சிலைகள், ஓவியங்கள், சங்கீதம், நாட்டியம் எல்லாம் மிகவும் உயர்ந்தவை.

இவற்றிற்கு இணையான கலைகள் உலகத்தில் வேறெங்கும் இல்லை. நாங்கள் பெருமை வாய்ந்த நாகரிகமும் பண்பாடும் உடையவர்கள். எங்கள் நாட்டை அடிமை நாடாக இருக்க இனிமேல் விட மாட்டோம் என்று மக்கள் அலைபோலத் திரண்டு எழுந்தார்கள் எவ்வித மான தியாகத்தையும் செய்ய முன்வந்தார்கள்.

இப்படியெல்லாம் தமிழ் மக்களுக்கு விழிப்பையும் உணர்ச்சியையும் ஊட்டியவர்களில் முக்கியமானவர் பாரதியார்தான். அவருடைய பாடல்களைக் கேட்டு மக்கள் தோளைத் தட்டிக் குதித்து எழுந்தார்கள்

பாரதியார் தமது பாடல்களால் இந்த விழிப்பை உண்டாக்கினார். மேலும் இவர் பேசிய பேச்சைக் கேட்கும் மக்கள் ஊக்கம் கொண்டார்கள். இவர் நடத்திய பத்திரிகையின் மூலமாகவும் இவர் தேச பக்தியை உண்டாக்கினார்.

இன்று தமிழ் நாட்டு மக்கள் எல்லாம் இவருடைய திருநாளைக் கொண்டாடுகிறார்கள். இவருடைய பாடல்களையும், மற்ற எழுத்துக்களையும் போற்றுகிறார்கள். இவர் பெரியவர்களுக்கு மட்டும் பாட்டு எழுதவில்லை. குழந்தைகளுக்கும் அழகான பாடல்கள் எழுதியிருக்கிறார்.

இப்படிபட்ட சிறந்த கவிஞரின் வாழ்க்கையைப்பற்றி நாம் தெரிந்து கொள்ள வேண்டாமா?

முதலில் பூ மொக்காக இருக்கிறது. பிறகு அது மலராகின்றது. அப்படி மலரும் போது மிக அழகாக

இருக்கிறது அதுபோலத்தான் தமிழிலே ஒரு புதிய மலர்ச்சியையும், தமிழ்நாட்டு மக்களிடத்திலே ஒரு புதிய சக்தியையும் உண்டாக்கிய பாரதியாரின் வாழ்க்கையைப் யைப்பற்றி ஒவ்வொரு குழந்தையும் தெரிந்து கொள்ள வேண்டும்.

நமது இந்திய நாட்டிற்கு விடுதலை வாங்கித் தந்த மஹாத்மா காந்தியை நாம் நமது நாட்டின் தந்தை என்று கொண்டாடுகிறோமல்லவா? அவருடைய வாழ்க்கை ஓர் அதிசயமான வாழ்க்கை. அதைப் பற்றி நாம் தெரிந்து கொள்வது எவ்வளவு அவசியமோ அது போல் பாரதியாரின் வாழ்க்கையைப் பற்றி நாம் அவசியம் தெரிந்து கொள்ள வேண்டும்.

பாரதியாரின் முழுப் பெயர் சுப்பிரமணிய பாரதி யார் என்பதாகும். இவருடைய தந்தையின் பெயர் சின்னச்சாமி ஐயர். தாயின் பெயர் லட்சுமி அம்மாள். இவர்களுக்கு பாரதியார் 1882 ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் 11ஆம் தேதியன்று பிறந்தார்.

பாரதியார் பிறந்தது எட்டயபுரம் என்ற சமஸ்தா னத்தில். இந்த சமஸ்தானத்திற்கு ஒரு ராஜா இருந் தார். அந்தக் காலத்தில் இப்படிச் சின்ன சமஸ்தானங் கள் இந்தியாவிலே நிறைய இருந்தன. ராஜா என்ற பெயரிலும், ஜமீன்தார் என்ற பெயரிலும் பலர் அவற் றின் தலைவராக இருந்து வந்தார்கள். அவர்களும் ஆங்கி லேயருக்கு அடங்கியவர்கள்தான்; தனிப்பட்ட சுதந் திரம் உடையவர்கள் அல்ல.

இந்தியா விடுதலை அடைந்த பிறகு இவைகளெல்லாம் மறைந்துவிட்டன. இந்தியா ஒரு பெரிய நாடாக ஆயிற்று. இப்போது தமிழ்நாடு, ஆந்திரப்பிரதேசம் என்றிப்படி மாநிலங்கள்தான் உண்டு. எட்டயபுரம்

சமஸ்தானத்தில் சின்னச்சாமி ஐயருக்கு செல்வாக்கு அதிகமாக இருந்தது. அவர் ராஜாவுக்கு மிகவும் வேண் டியவர். அதனால் பாரதியாருக்கும் அங்கே அதிக மதிப் பிருந்தது.

பாரதியார் இளமையிலேயே கவிபாடுவார். இவரு டைய திறமையை மெச்சி இவருக்கு பாரதி என்ற பட் டம் அளித்தார்கள்.

அதனால்தான் சுப்பிரமணிய பாரதியாரை நாம் பார தியார் என்றே அழைக்கிறோம். பாரதி என்ற பட்டம் வாங்கியவர் பல பேர் இருந்தாலும் பாரதி என்று இன்று சொன்னாலே அது சுப்பிரமணிய பாரதியாரையே குறிப்பதாக அமைந்து விட்டது. மஹாத்மா என்று சொன்னால் எப்படி அது காந்தி அடிகளைக் குறிக்கிறதோ அப்படி பாரதி என்றவுடன் சுப்பிரமணிய பாரதியாரே நினைவுக்கு வரும்.

தந்தையான சின்னச்சாமி ஐயர் பாரதியாரின் இளம் பருவத்திலேயே இறந்து போனார். அதனால் பாரதியார் காசிக்குச் சென்று சில ஆண்டுகள் தம் அத்தை வீட்டில் வாழ்ந்தார். அந்தச் சமயத்தில் ஹிந்தியும் சமஸ்கிருத மும் அவர் கற்றுக் கொண்டார்.

முன்பே இவர் எட்டயபுரத்தில் இருந்தபோது திரு நெல்வேலி ஹிந்து கலாசாலையில் ஐந்தாம் படிவம்வரை ஆங்கிலம் கற்றிருந்தார்.

பாரதியார் தமது பதினெட்டாவது வயதில் காசி யில் இருந்திருக்கிறார். அதனால் வங்காளத்தில் ஓங்கி வளர்ந்த தேசீய உணர்ச்சி இவர் உள்ளத்திலும் பாய்ந்து விட்டது. இளமைப் பருவம்தான் இப்படி உயர்ந்த எண்ணங்களெல்லாம் மனதில் பதிவதற்கு ஏற்றது அல் லவா?

பாரதியார் பிறகு எட்டயபுரத்திற்குத் திரும்பி வந்தார். ஆனால் அங்கே சமஸ்தானப் புலவராக இருக்க இவருக்குப் பிடிக்கவில்லை.

அதனால் மதுரைக்குச் சென்று இரண்டு மூன்று மாதம் தமிழாசிரியராக ஓர் உயர்நிலைப்பள்ளியில் வேலை செய்தார். அதையும் விட்டுவிட்டுப் பிறகு சென்னைக்கு வந்து சுதேசமித்திரன் பத்திரிகையில் துணை ஆசிரியராக அமர்ந்தார்.

அப்படி இவர் சென்னைக்கு வந்தது தமிழுக்கு நல்ல காலம்; தமிழ் மக்களுக்கும் நல்ல காலம் என்று சொல்லலாம்.

சுதேசமித்திரனில் தமது விருப்பம் போல தேசபக்தியைத் தமிழ் மக்களுக்கு ஊட்ட முடியாது என்பதை பாரதியார் விரைவில் உணர்ந்தார்.



அதனால் இந்தியா என்ற வார இதழை இவர் தனி யாக நடத்தத் தொடங்கினார். அதற்கு நிறையப் பணம் வேண்டுமல்லவா? பெரிய செல்வ வந்தர்களான மண்ட யம் குடும்பத்தார் இந்தப் புதிய முயற்சிக்குப் பொருள் உதவி செய்தார்கள். அதனால் இந்தியா வார இதழ் நன்கு நடைபெற்றது.

பாரதியார் தமது விருப்பம்போல எழுதினார். தமி ழர்களைத் தட்டி எழுப்பினார். சொந்த நாட்டில் பிறர்க்கு அடிமை செய்தே துஞ்சிடோம் இனி அஞ்சிடோம்—

எந்த நாட்டிலும் இந்த அநீதிகள் ஏற்குமோ— தெய் வம்—பார்க்குமோ?

என்று தேச பக்தர் வ. உ. சிதம்பரம்பிள்ளை கூறுவதாக பாரதியார் ஓர் உணர்ச்சி மிகுந்த பாட்டுப் பாடி யிருக்கிறார். இந்த சிதம்பரம் பிள்ளையைத்தான் கப்ப லோட்டிய தமிழன் என்று நாம் போற்றுகின்றோம்.



இந்தக் காலத்தில் நம்முடைய நாட்டுக் கப்பல்கள் தான் இந்தியக் கடற்கரை ஓரங்களிலுள்ள நகரங்களுக்கும் வேறு இடங்களுக்கும் செல்லுகின்றன. வியாபாரம் செய்யவும், பலவகையான பொருள்களையும் மக்களையும் ஏற்றிச் செல்லவும் அவை பயன்படுகின்றன.

ஆனால் அந்தக் காலத்தில் நமது நாடு அடிமையாக இருந்தபோது நம்மால் கப்பலோட்ட முடியவில்லை. அதற்கு வேண்டிய பொருள் வசதியும், அரசாங்க உதவியும் கிடையாது.

வ. உ. சிதம்பரம் பிள்ளை அவர்கள்தான் முதன் முதலில் துணிந்து பொருள் திரட்டிக் கப்பல் விட்டார். அவர் தேச பக்தி மிகுந்தவர். அவர் கலெக்டராக இருந்த வெள்ளைக்காரனாகிய விஞ்ச் துரையைப் பார்த்துக் கூறுவதாக இந்தப் பாடல் எழுதப்பட்டிருக்கிறது.

பாரதியாரும் இவரும் நெருங்கிய நண்பர்கள். இரண்டு பேரும் தேச பக்தர்கள். சிதம்பரம் பிள்ளை பாரதியாரை மாமா என்றே அழைப்பார். மக்களுக்கு தேச பக்தி உண்டாவதற்கு இவரும் முக்கிய காரணம்.

சிதம்பரம்பிள்ளை விஞ்ச் துரையைப் பார்த்து மேலும் சொல்லுகிறார். எங்கள் செல்வத்தையெல்லாம் கொள்ளை கொண்டு போகிறீர்கள். நாங்கள் வறுமையால் சாகின்றோம். நாங்களும் உங்களைப் போல ஆண் பிள்ளைகள்தான். எங்கள் உயிர் வெல்லமல்ல. இந்த உயிர் போனாலும், நாங்கள் இனிமேல் பயப்படமாட்டோம். இப்படி அவர் சொல்வதாக பாரதியார் வீராவேசங் கொண்ட பாட்டாக முழங்கினார். பாட்டையே கேட்கலாம்:

பொழுதெல்லாம் எங்கள் செல்வம் கொள்ளை
கொண்டு
போகவோ? நாங்கள்—சாகவோ?
அழுது கொண்டிருப்போமோ ஆண்பிள்ளைகள்
அல்லமோ?—உயிர்—வெல்லமோ.

இப்படியெல்லாம் பாரதியார் வீரம் என்கின்ற உணர்ச்சி கொழுந்துவிட்டு எரியும்படியாகப் பல பாடல்களை எழுதினார்.

இந்திய மக்களில் பலபேர் அந்தக் காலத்தில் தேசத்தின் மீது பக்தி கொண்டிருப்பதாக நடித்தார்கள். உண்மையில் அவர்களுக்கு நாட்டுப்பற்று இல்லை. அவர்களை எல்லாம் பழித்துப் பாட்டெழுதினார்

நெஞ்சில் தைரியம் இல்லை; நேர்மையும் இல்லை. வஞ்சகமாகப் பேசுவார்கள். வாய்ச் சொல்லில் அவர்கள் வீரர்கள். இப்படி பாரதியார் ஒரு பாடல் இயற்றி இருக்கிறார்.

நெஞ்சில் உரமுமின்றி நேர்மைத் திறமும் இன்றி
வஞ்சனை சொல்வாரடி—கிளியே
வாய்ச் சொல்லில் வீரரடி!

கிளியைப் பார்த்துச் சொல்வதாக இந்தப்பாடலைப் பாரதியார் எழுதியிருக்கிறார்.

இந்திய மக்களிடையே அன்று ஜாதிச் சண்டை அதிகமாக இருந்தது. நான் ஹிந்து, நீ கிறிஸ்துவன் என்று இப்படி சமயத்தின் (மதத்தின்) பெயராலும் சண்டையிட்டுக் கொண்டிருந்தார்கள் மேலும் இந்தியர்களிடம் தைரியம் இருக்கவில்லை. அச்சமே அதிகமாக இருந்தது. ஒற்றுமையோடு எதையும் இந்தியர்கள் செய்யவில்லை.

இந்தக் குறைகளையெல்லாம் ஓர் ஆங்கிலேய அதிகாரி எடுத்துக் காண்பிப்பதாக ஒரு பாடலும் எழுதியிருக்கிறார். அதில் சிலவரிகளை மட்டும் உங்களுக்கு இப்போது கீழே தருகிறேன்:



*ஜாதிச் சண்டை போச்சோ?—உங்கள்*
*சமயச் சண்டை போச்சோ?*
*நீதி சொல்ல வந்தாய்—கண்முன்*
*நிற்கொணாது போடா!*

*அச்சம் நீங்கினாயோ? — அடிமை*
*ஆண்மை தாங்கினாயோ?*
*பிச்சை வாங்கிப் பிழைக்கும் — ஆசை*
*பேணுதல் ஒழித்தாயோ?*

*ஒற்றுமை பயின்றாயோ? — அடிமை*
*உடம்பில் வலிமை உண்டோ?*
*வெற்றுரை பேசாதே — அடிமை*
*வீரியம் அறிவாயோ?*

*(குறிப்பு: பேணுதல் — விரும்புதல்; பயின்றாயோ — கற்றாயோ; வெற்றுரை — வீண்வார்த்தை; வீரியம் — தைரியம்)*

வயது வரும்போது நீங்கள் இந்தப் பாடல் முழுவதை யும் படிக்கலாம். படிப்பதும் அவசியம். ஏனென்றால் இன்றும் நமது நாட்டு மக்களிடத்தில் இந்தக் குறைகள் எல்லாம் முற்றிலும் நீங்க வில்லை. பாரதியார் இப்படிப் பட்ட பல சிறந்த பாடல்கள் எழுதியிருக்கிறார். அந்தப் பாடல்கள் பெரும்பாலும் இந்தியா வாரஇதழில் வெளி வந்தன.

மேலும் தேச உணர்ச்சி மிக்க பல கட்டுரைகளும் எழுதினார். இவை தமிழ்நாட்டிலே தேசபக்தி வளரக் காரணமாக இருந்தன. ஆங்கிலேய அரசாங்கம் இந்த நிலைமையைக் கண்டு பயந்தது. 'பாரதியாரின் பாட் டைக் கேட்டால் செத்துப்போன பிணமும் உயிர் பெற்று விடும். அடிமையாக இருக்கும் நாடு விடுதலை உடனே அடையும்' என்று வெள்ளைக்காரர்கள் அஞ்சினார்கள். அதனால் இந்தியா வார இதழைச் சென்னையிலிருந்து வெளிவராமல் தடுக்க எண்ணினார்கள். அதற்கு வேண் டியவாறு சட்டமும் கொண்டு வந்தார்கள்.

பாரதியார் பாண்டிச்சேரிக்குச் சென்றார். பாண்டிச் சேரிக்குப் புதுச்சேரி என்றும் புதுவை என்றும் பெயர்கள் உண்டு. பாண்டிச்சேரியும் இன்று இந்தியாவைச் சேர்ந்த ஒரு பகுதி என்பது உங்களுக்குத் தெரியும். அது அந்தக் காலத்தில் பிரெஞ்சுக்காரர்களுக்குச் சொந்தமாக இருந் தது. அங்கு ஆங்கிலேயரின் சட்ட திட்டங்களை ஏற்றுக் கொள்ள மாட்டார்கள்.

ஆகவே பாரதியார் பாண்டிச்சேரிக்குச் சென்று அங்கி ருந்து மறுபடியும் இந்தியா வார இதழை நடத்தத் தொடங்கினார். தமிழ் மக்கள் உள்ளத்திலே தேச பக்தி என்ற கனல் மேலும் மேலும் கொதித்தெழுந்தது.

இதைக் கண்டு ஆங்கிலேயர் மறுபடியும் பயப்பட் டார்கள். என்ன செய்யலாம் என்று யோசனை செய்

தார்கள். அப்படி யோசனை செய்து பாண்டிச்சேரியில் வெளியாகும் இந்தியா வார இதழைத் தமது ஆட்சிக் குட்பட்டிருந்த தமிழ்நாட்டிற்குள் வரவொட்டாமல் தடுத்து விட்டார்கள். ஆங்கிலேயரின் ஆட்சிக்கு உட் பட்டிருக்கும் நாட்டில் அந்த இதழை வராமல் தடுப் பதற்கு அவர்களுக்கு அதிகாரம் உண்டு. இது அநியாயம் என்று யாரும் கேட்க முடியாது. ஆங்கிலேயர் வைத்தது தான். சட்டம் என்று அன்று இருந்தது.

பாண்டிச்சேரி ஒரு சிறிய பகுதி. அங்கும் தமிழர்கள் வாழ்கிறார்கள் என்றாலும் அவர்களுடைய ஆதரவைக் கொண்டு பத்திரிகை வெளிவரமுடியவில்லை. நிறையப் பிரதிகள் விற்பனையானால்தான் ஒரு பத்திரிக்கையை நடத்த முடியும். தமிழ் நாட்டிற்கு இந்தியா வார இதழ் வராமல் போகவே அதை நடத்த முடியாமல் போய் விட்டது.

பாரதியார் மனம் தளராமல் என்னென்னவோ பத் திரிக்கைகள் நடத்த முயன்றார். அந்த முயற்சியெல்லாம் வெற்றியாகவில்லை. தமிழ் நாட்டிலிருந்து பணம் பாண் டிச்சேரிக்குப் போவதையும் ஆங்கிலேயர் தந்திரமாகத் தடுத்து விட்டார்கள்.

இதனால் பாரதியார் வறுமையால் மிகவும் துன்பப் பட்டார். இவர் பாண்டிச்சேரிக்கு **1908** ஆம் ஆண்டில் சென்றார். அங்கிருந்து **1918** ஆம் ஆண்டில் முதல் உலக யுத்தம் முடிந்த பிறகுதான் தமிழ் நாட்டிற்கு வந்தார்.

அதுவரையில் சுமார் பத்து ஆண்டுகள் பாரதியார் இவ்வாறு வாடினார். இவருக்குச் சிறு வயதிலேயே திரு மணமாகியிருந்தது. இப்படிச் சிறு வயதில் திருமணம் செய்து கொள்வதை பாரதியார் மிகவும் கண்டித்து எழுதியிருக்கிறார்.

ஆனல் இவர் சிறுவயதாக இருக்கும்போது இவருடைய தந்தை சின்னச்சாமி ஐயர் வைத்ததுதான் சட்டம். யாரும் அவரிடம் எதிரில் நின்று பேசவும் அஞ்சுவார்களாம்.

பாரதியார் அந்தச் சிறு வயதிலே என்ன செய்வார்—பாவம்—பேசாமல் மணம் செய்து கொண்டார். இவருடைய மனைவியின் பெயர் செல்லம்மா என்பது.

இவர்களுக்குப் பிறந்த முதல் பெண்ணின் பெயர் தங்கம்மா. அவளை பாரதியார் காசியிலுள்ள தமது அத்தை வீட்டிற்கு அனுப்பினர். அத்தை வீட்டில் அந்தக் குழந்தை வளர்ந்து வந்தது.

பாரதியாருக்கு மற்றொரு பெண் குழந்தை உண்டு. அதன் பெயர் சகுந்தலா.

பாரதியாருக்குக் குழந்தைகள் என்றால் மிகவும் பிரியம். இந்த அன்பைக் கண்ணம்மா—என் குழந்தை என்ற பாடலில் மிகவும் அழகாக வெளிப்படுத்தியிருக்கிறார்.

கண்ணன் என்பது கிருஷ்ணனுக்கு ஒரு பெயர் அல்லவா? கிருஷ்ணன் விஷ்ணுவின் அவதாரம் என்பதும் உங்களுக்குத் தெரியும். அந்தக் கிருஷ்ணனைக் கண்ணன் பாட்டு என்ற தம்முடைய நூலில் பாரதியார் பாடியிருக்கிறார். இசையோடு பாடுவதற்கு மிகப் பொருத்தமானவை அந்தப் பாடல்கள்.

கடவுளை எந்த வடிவத்தில் வேண்டுமானாலும் வணங்கலாம். அவரைத் தாயாக நினைத்து வணங்கலாம். தந்தையாக நினைத்து வணங்கலாம். குழந்தையாக நினைத்தும் வணங்கலாம்.

கண்ணம்மா என்று அந்த தெய்வக் குழந்தையை பாரதியார் அன்போடு அழைப்பார். நீங்கள் கண் ணம்மா—என் குழந்தை என்று பாரதியார் எழுதிய பாட்டைக் கேட்டிருக்கிறீர்களா? இசை தெரிந்தால் அந்தப் பாட்டை அழகாகப் பாடலாம்.



பிள்ளைக் கனி அமுதே—கண்ணம்மா
பேசும் பொற்சித்திரமே
அள்ளி அணைத்திடவே—என் முன்னே
ஆடிவரும் தேனே!

என்று இப்படிக் குழந்தையை அளவில்லாத அன்போடு பாரதியார் அழைக்கிறார்.

அந்தக் குழந்தை ஓடிவரும்போது பாரதியாரின் உள்ளம் குளிர்கின்றதாம்.

ஓடிவருகையிலே — கண்ணம்மா
உள்ளம் குளிருதடீ
ஆடித்திரிதல் கண்டால்—உன்னைப்போய்
ஆவி தழுவுதடீ!

இப்படியெல்லாம் அழகாக எழுதுகின்றார். குழந்தைகளிடம் எவ்வளவு அன்பு பாரதியாருக்கு இருந்தது என்பதை இந்தப் பாட்டில் நன்றாக அறிந்து கொள்ளலாம்.

சொல்லும் மழலையிலே—கண்ணம்மா
துன்பங்கள் தீர்த்திடுவாய்
முல்லைச் சிரிப்பாலே—எனது
மூர்க்கம் தவித்திடுவாய்.

அந்தக் குழந்தை சிரிக்கின்ற சிரிப்பு முல்லைப் பூவைப் போல இருக்கிறதாம். சிரிக்கும் போது பல் எல்லாம் தெரிகிறதல்லவா? அவை முல்லை மலரைப் போல இருக்கிறதென்று அவர் எழுதுகிறார்

அப்படிச் சிரித்து பாரதியாருக்கு மூர்க்கம் (கோபம்) இல்லாதபடி செய்து விடுகிறதாம் அந்தக் குழந்தை!
இந்தப் பாடலை நீங்கள் முழுமையாகப் படித்து இன்பம் அடைய வேண்டும். இசையைப் பழகிப் பாடினால் மேலும் இனிமையாக இருக்கும்.

மற்றொரு பாடலிலே கண்ணனை விளையாட்டுப் பிள்ளையாக அவர் கூறுகின்றார். அந்தப் பாடலும் மிக அழகானது. இசைக் கச்சேரிகளிலே பெரிய பெரிய வித்வான்கள் அதைப்பாடி அங்கு கூடியுள்ளவர்களை யெல்லாம் மகிழ்ச்சிக் கடலில் ஆழ்த்துவார்கள்.

கண்ணனுடைய விளையாட்டுக் குறும்புகளை யெல்லாம் அப்பாடலில் அவர் கூறுகின்றார். பழங் கொண்டு வந்து தின்பதற்காகக் கண்ணன் தருவானும். தின்கின்றபோதே பழத்தைத் தட்டிப் பறிப்பானும். என் கண்ணே, என் ஐயனே, என்று கெஞ்சினால் பழத்தை எச்சிற்படுத்திக் கொடுப்பானும்!



தின்னப் பழங்கொண்டு தருவான்—பாதி
தின்கின்ற போதிலே தட்டிப் பறிப்பான்
என்னப்பன் என் ஐயன் என்றால்—அதனை
எச்சிற்படுத்திக் கடித்துக் கொடுப்பான்.

கண்ணன் அழகான மலர்களைக் கொண்டு வருவான். நீ கண்ணை மூடிக் கொள்; உன் தலையிலே வைக்கிறேன் என்பான். அதை உண்மை என்று நம்பிக் கண்ணை மூடிக் கொண்டால் தோழிக்கு மலர்களை வைத்து விடுவான்!

அழகுள்ள மலர்கொண்டு வந்தே—என்னை
அழ அழச் செய்தபின், 'கண்ணை மூடிக்கொள்
குழலிலே சூட்டுவேன்' என்பான்—என்னைக்
குருடாக்கி மலரினைத் தோழிக்கு வைப்பான்.

இப்படி ஒரு குறும்புதானா?

பின்னலைப் பின்னின்று இழுப்பான்—தலை
பின்னே திரும்புமுன் னேசென்று மறைவான்.
வண்ணப் புதுச் சேலை தனிலே—புழுதி
வாரிச் சொரிந்து வருத்திக் குலைப்பான்.

ஒவ்வொரு சமயம் கண்ணன் புள்ளாங் குழலை எடுத்து வருவான். அதிலே அமுதம் போன்ற இனிய இசையை வாசிப்பான்.

புள்ளாங் குழல் கொண்டு வருவான்! — அமுது
பொங்கித் ததும்புநற் கீதம் படிப்பான்.

அந்த இசையைக் கேட்டு அப்படியே மயங்கிப் போய் வாயைத் திறந்து கொண்டு கேட்பார்களாம். அப்பொழுது அவன் செய்யும் வேடிக்கையைப் பார்க்க வேண்டுமே!

அங்காந் திருக்கும் வாய் தனிலே—கண்ணன்
ஆறேழு கட்டெறும்பைப் போட்டு விடுவான்!

இப்படிக் கண்ணன் பாட்டு முழுவதும் மிக அழகாக இருக்கும். பெரியவர்களாகும் போது நீங்கள் அதைத்

தவருமல் படித்து இன்ப மடைய வேண்டும். அதில் வருகின்ற உயர்ந்த உண்மைகளெல்லாம் அப்பொழுது உங்களுக்கு நன்ருகப் புரியும்.

பத்திரிக்கை நடத்தும் முயற்சிகள் நின்றுவிட்ட பிறகு இப்படிப் பல சிறந்த கவிதை நூல்களைப் பாரதியார் இயற்றினர். பாஞ்சாலிசபதம், குயில் பாட்டு, கண்ணன் பாட்டு என்ற நூல்களை யெல்லாம் இப்பொழுது எல்லாரும் பாராட்டுகின்ருர்கள். ஆனல் அந்தக் காலத்தில் யாரும் அவற்றின் அருமையைத் தெரிந்து கொள்ளவில்லை. அவற்றைப் பாராட்டவும் இல்லை.

அதனுல் பாரதியார் வறுமையில் வாடிக் கொண்டிருந்திருந்தார். இருந்தாலும் மனம் தளராமல் 'நமக்குத் தொழில் கவிதை; நாட்டிற்கு உழைத்தல்' என்று எண்ணி வாழ்ந்தார். கவிதை பாடுவதும், நாட்டிற்காக உழைப்பதும்தான் அவர் தொழிலாம்.

பாரதியார் வயது வந்தவர்களுக்கு மட்டும் பாடவில்லை. குழந்தைகளுக்கும் பாடி இருக்கிருர். ஔவைப் பாட்டி எழுதிய ஆத்தி சூடியை நீங்கள் படித்திருப்பீர்கள்.

அறம் செய விரும்பு
ஆறுவது சினம்

என்று இப்படி ஔவைப் பாட்டியின் ஆத்திசூடி ஆரம்பிக்கும்.

ஔவைப் பாட்டியிடத்திலே பாரதியாருக்கு மிகுந்த மதிப்பு உண்டு. ஔவையாரைப் புகழ்ந்து பாரதியார் நீளமான ஒரு கட்டுரையே எழுதி இருக்கிருர். அதிலே ஔவையாரின் சிறப்பை யெல்லாம் அவர் எடுத்துச் சொல்லியிருக்கிருர்.

ஔவையாரைப் போலவே ஒரு புதிய ஆத்திசூடி செய்ய வேண்டுமென்று பாரதியாருக்கு ஆசை உண்டாயிற்று.

பாரதியார் உயிரோடு வாழ்ந்த காலத்திலே நமது நாட்டு மக்கள் அந்நிய ஆட்சியை எதிர்த்து நிற்காமல் கோழைகளாக இருந்தார்கள் அல்லவா? அவர்களுக்கு வீர உணர்ச்சி ஊட்டவேண்டுமென்று நினைத்து தமது புதிய ஆத்திசூடியில்

அச்சம் தவிர்
ஆண்மை தவறேல்
இளைத்தல் இகழ்ச்சி

என்று இவ்வாறு எழுதியிருக்கிறார். குழந்தைகள் எல்லாம் இளமையிலேயே இவற்றையும் படித்து வீர உணர்ச்சி பெற வேண்டும் என்பது பாரதியாரின் ஆசை.

மேலும் அடிமை விலங்கை உடைத்தெறிய என்னவெல்லாம் முக்கியமாகத் தேவையோ அவற்றையெல்லாம் பாரதியார் தமது புதிய ஆத்திசூடியில் தந்திருக்கிறார். ஒரு சிலவற்றை மாதிரிக்காக இங்கு காண்பிக்கிறேன்.

உடலினை உறுதிசெய்
ஒற்றுமை வலிமையாம்
கொடுமையை எதிர்த்து நில்
தேசத்தைக் காத்தல் செய்

பொய்ம்மையை இகழ்
போர்த் தொழில் பழகு
வீரியம் பெருக்கு

இவ்வாறு பல சிறந்த நீதிகளை அவர் புதிய ஆத்திசூடியில் சொல்லியிருக்கிறார். நீங்கள் அவற்றை முழுவதும் தெரிந்து கொள்ள வேண்டும்.

யாரெல்லாம் நம் நாட்டிலே இருப்பதற்குத் தகுதி அற்றவர்கள் என்று பாரதியார் ஒரு பாடலிலே காட்டுகிறார். அவர்களை எல்லாம் போ போ போ என்று வீர முழக்கம் செய்கிறார். அதே சமயத்தில் யாரெல்லாம் நம் நாட்டிலே இருக்க வேண்டும் என்பதையும் எடுத்துக் காண்பிக்கிறார். அவர்களை அன்போடு வா வா வா என்றும் பாடுகிறார்.

தோள் வலிமையில்லாதவன் எதுவும் செய்ய முடியாது. மார்பு குறுகியவனும் கோழையாக இருப்பான். ஆகையால் அவர்களைப் பார்த்து;

வலிமையற்ற தோளினாய் போ போ போ
மார்பிலே ஒடுங்கினாய் போ போ போ

என்று இப்படிப் பலரைப் பாரதியார் தேசத்திலிருந்து ஓடிப் போகும்படி சொல்கிறார். அதாவது இப்படிப் பட்டவர் நம் தேசத்திலே தோன்றக் கூடாதாம்

நம் நாட்டிற்குக் கண்களிலே ஒளிபடைத்தவன் வேண்டும்; உறுதி கொண்ட நெஞ்சுள்ளவன் வேண்டும்; தெளிவான அறிவுடையவன் வேண்டும். இப்படி உயர்ந்த சிறப்புடையவர்களை வாவென்று அழைக்கிறார்.

ஒளிபடைத்த கண்ணினாய் வா வா வா
உறுதி கொண்ட நெஞ்சினாய் வா வா வா
களிபடைத்த மொழியினாய் வா வா வா
கடுமை கொண்ட தோளினாய் வா வா வா
தெளிவு பெற்ற மதியினாய் வா வா வா
சிறுமை கண்டு பொங்குவாய் வா வா வா

இவ்வாறு உயர்ந்த சிறப்புடைய பலரையும் வா வா என்று வரவேற்கிறார். நீங்கள் எல்லாரும் இப்படி ஆக வேண்டும் என்பது பாரதியாருடைய ஆசை.

போகின்ற பாரதமும் வருகின்ற பாரதமும் என்று இந்தப் பாடலுக்கு இவர் தலைப்புக் கொடுத்திருக்கிறார். இதுவும் ஒரு நாளும் மறக்காமல் நினைவில் வைத்துக் கொள்ள வேண்டிய பாட்டு.

அதை முழுமையாக நீங்கள் மனப்பாடம் செய்து கொள்வது நல்லது. அத்துடன் பாரதியார் எவற்றை யெல்லாம் விரும்ப வில்லையோ அவற்றைப் போக்க முயல வேண்டும். அவர் விரும்புவது போல இளைஞர்கள் தோன்றி விட்டால் நம்நாடு மிகவும் உயர்ந்து விளங்கும்.

முன் காலத்திலே நமது நாடு எல்லாரும் போற்றும் படியாக இருந்தது. அந்நியர்களுக்கு அடிமைப்பட்ட தால் அந்தச் சிறப்பெல்லாம் மங்கிவிட்டது. இப் பொழுது நமக்குச் சுதந்திரம் கிடைத்திருக்கிறது. இனி



மேல் நாம் பழைய சிறப்பை எல்லாம் அடைய வேண்டும். புதிய பல சிறப்புக்களேயும் பெற்று உலகத்திலே மறுபடியும் மற்ற நாட்டினர் எல்லாம் போற்றும்படியாக வாழவேண்டும்.

அதற்காகத் தொழில் வளம் ஓங்க வேண்டும்:

இரும்பைக் காய்ச்சி உருக்கிடு வீரே
யந்திரங்கள் வகுத்திடு வீரே
கரும்பைச் சாறு பிழிந்திடு வீரே
கடலில் மூழ்கி நல் முத் தெடுப்பீரே
அரும்பும் வேர்வை உதிர்த்துப் புவி மேல்
ஆயிரம் தொழில் செய்திடு வீரே

என்று பாரதியார் பாடுகிருர்.

பாரதியாருடைய வாழ்க்கை வரலாற்றைச் சொல்ல வந்ததை நடுவில் அப்படியே விட்டு விட்டேன். இந்தப் பாடல்கள் எல்லாம் உங்களுக்கு நன்ருகத் தெரிந்திருக்க வேண்டும் என்பதற்காக இவ்வளவு தூரம் எழுதினேன். இனி இவருடைய வாழ்க்கையைத் தொடர்ந்து பார்ப்போம்.

பாரதியார் பாண்டிச்சேரியில் எவ்வளவோ துன்பங்களே அனுபவித்த போதிலும் நமது நாட்டை மறக்கவில்லே. அதற்கு வேண்டிய முன்னேற்றங்களேப் பற்றிப் பாடிக் கொண்டே இருந்தார்.

இவருக்குத் தங்கம்மா என்று ஒரு குழந்தை இருந்ததென்று சொன்னேனல்லவா? அந்தக் குழந்தை காசியில் பாரதியாருடைய அத்தையின் வீட்டில் வளர்ந்துகொண்டிருந்தது என்றும் சொல்லியிருக்கிறேன்.

சகுந்தலா என்ற பெயருடைய மற்ெருரு குழந்தை யும் இருந்தது. அதைப் பாப்பா என்று செல்லமாக அழைப்பார்கள். அந்தக் குழந்தை ஒரு நாள் ஏதோ குறும்பு செய்ததாம். அதற்காக பாரதியாரின் மனைவி யான செல்லம்மா பாப்பாவை வைதார்களாம். அத ஞல் பாப்பா அழுதது.

பாரதியாருக்கு எந்தக் குழந்தையும் அழுவது பிடிக் காது. தம்முடைய அருமைப் பாப்பா அழுவதைக் கண்டு அவர் பொறுப்பாரா?

இனிமேல் இந்தக் குழந்தையை நானே கவனித்துக் கொள்கிறேன் என்று சொல்லி எடுத்து அணைத்துக் கொண்டார். அப்பொழுது பாப்பாவுக்கு ஓர் அருமை யான பாட்டைப் பாடினர். அதில் உள்ள கருத்தை மிக நன்ருக எல்லாக் குழந்தைகளும் மனதில் வைத்துக் கொள்ள வேண்டும். அதைப் பற்றித் தனியாகவும் சற்று விரிவாகவும் பின்னல் எழுதுகிறேன்.

இப்பொழுது பாரதியாரின் வாழ்க்கை வரலாற்றை முதலில் தொடர்ந்து சொல்லுகிறேன்.

பாரதியார் சுமார் பத்து ஆண்டுகள் பாண்டிச்சேரி யில் வாழ்ந்தார். 1908-ல் அங்கு சென்றவர் 1918 வரையில் தமிழ்நாட்டிற்குள் வரவில்லை என்று முன்பே சொன்னேன். 1914 ஆம் ஆண்டிலே முதல் உலகயுத் தம் தொடங்கிற்று. அது 1918 ஆம் ஆண்டு வரை நான்கு ஆண்டுகள் பயங்கரமாக நடந்தது. பலபேர் மடிந்தார்கள். எத்தனையோ துன்பம் ஏற்பட்டது.

கடைசியில் யுத்தம் முடிந்தது. முடிந்த பிறகு ஆங்கி லேயர்கள் இந்தியாவுக்குச் சுதந்திரம் ஓரளவாவது கொடுப்பார்கள் என்று எதிர்பார்த்தார்கள்.

அதனால் பாரதியார் பாண்டிச்சேரியை விட்டுத் தமிழ் நாட்டிற்குள் வரலாமென்று நினைத்து அடியெடுத்து வைத்தார். உடனே இவரைக் கைது செய்து சிறையில் அடைத்தார்கள். பிறகு பல தலைவர்களின் முயற்சியால் இவருக்குச் சிறையிலிருந்து விடுதலை கிடைத்தது.

பாரதியார் சென்னைக்கு வந்து சில நாள் தங்கிவிட்டுக் கடயத்திற்குச் சென்று வசிக்கலானார். கடயம் என்பது தான் இவர் மனைவி செல்லம்மாளின் ஊர்.

அங்கு நீண்ட நாள் வசிக்க இவருக்குப் பிடிக்கவில்லை. தாம் எழுதிய நூல்களை யெல்லாம் அச்சிட்டு வெளியிட முயற்சி செய்தார். அதுவும் வெற்றிபெறவில்லை. அந்தக் காலத்திலே தமிழ் மக்கள் இவரைப் போற்றத் தவறி விட்டார்கள்.

அதனால் கடைசியில் திரும்பவும் சென்னைக்கு வந்து சுதேசமித்திரன் பத்திரிக்கையில் துணையாசிரியராகச் சேர்ந்தார். பல கட்டுரைகள் எழுதினார். இடையிடையே பல சொற்பொழிவுகளும் செய்தார்.

பாரதியார் பாண்டிச்சேரியை விட்டு வெளியேறிய காலத்திலேயே இவருடைய உடல் நிலை மோசமாக இருந்தது. உடம்பு எப்பொழுதுமே பாரதியாருக்கு மெலிவாகத்தான் இருக்கும். ஆனால் இவர் மனச் சோர்வு கொள்ளவே இல்லை. எந்தக் காலத்திலும் இவர் வேடிக்கையாகவும் நகைச் சுவையோடும் பேசுவார்; எழுதுவார். இவரைப் பார்த்தாலே யாருக்கும் நெஞ்சு நிமிரும்; தைரியம் பிறக்கும்.

பாரதியார் சென்னையில் திருவல்லிக்கேணியில் குடியிருந்தார். இவருக்கு தெய்வ பக்தி மிகுதியாக உண்டு. கடவுளைப் பற்றிய பல பாடல்கள் எழுதியிருக்கிறார்.

எல்லா உருவத்திலும் கடவுளை வணங்கிப் பாடி இருக்கிருர். பக்தியினுலே பயன் மிகவும் உண்டு என்று இவர் தெளிவாகச் சொல்லுகிருர்.

இவருக்கு பராசக்திதான் விருப்பமான தெய்வம். ஆனுல் இவர் மற்ற மூர்த்திகளையும் போற்றுவார். இவர் முருகனைப் பாடியிருக்கிருர். கிருஷ்ணனைப் பாடி இருக்கிருர். விநாயகரைப் பாடியிருக்கிருர். அதே போல இயேசுவைப் போற்றிப் பாடல் இயற்றி இருக்கிருர். இஸ்லாம் மதத்தைச் சேர்ந்தவர்கள் வணங்கும் அல்லாவைப் பாடி இருக்கிருர். இவ்வாறு வெவ்வேறு பெயர் வைத்து வணங்கினுலும் கடவுள் ஒன்றே என்பது இவருடைய கொள்கை. இதுவே உண்மையுமாகும். தெய்வம் பலபல சொல்லிச் சண்டையிடுவது மூடத்தனம் என்று இவரே கூறியிருக்கிருர்.

அதனுல் இவர் திருவல்லிக்கேணியிலிருக்கும் பார்த்தசாரதி கோயிலுக்கு அடிக்கடி செல்வது வழக்கம். அப்படிச் செல்லும்போது கோவில் யானைக்கு இவர் தேங்காய் பழம் கொடுப்பதுண்டு.

ஒரு நாள் கோவில் யானைக்கு மதம் பிடித்திருந்தது. அப்படி இருக்கும் சமயத்தில் யாரும் அதன் அருகில் செல்லக் கூடாது. கோவில் யானைக்கு மதம் பிடித்திருக்கிறது என்பது பாரதியாருக்குத் தெரியாது. இவர் வழக்கம்போல் அதற்குத் தேங்காய் பழம் கொடுக்க அருகில் சென்ருர்.

யானை இவரை உள்ளே இழுத்துத் தள்ளி விட்டது. பாரதியார் யானையின் காலுக்கருகில் கிடந்ததைப் பார்த்து இவருடைய நண்பரான குவளை—கிருஷ்ணமாசாரியார் என்பவர், இவரை அங்கிருந்து வெளியில் எடுத்துக் காப்பாற்றினுர்.



பாரதியாருக்கு உடம்பெல்லாம் காயம் ஏற்பட்டு விட்டது. ஆனால் விரைவில் இவர் குணமடைந்தார். என்றாலும் முன்னமேயே மெலிந்திருந்த உடல் மேலும் மெலிந்து விட்டது.

அத்துடன் இவருக்கு வயிற்றுக் கடுப்பு நோய் உண்டாயிற்று. அதனால் பாரதியார் 1921 ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் 11 ஆம் தேதி அமரர் ஆனார்.

பாரதியாரைப் போன்ற சிறந்தவர்களை மரணமடைந்தார் என்று சொல்வது வழக்கமில்லை. அவர் அமரர் ஆனார் என்று தான் சொல்ல வேண்டும். அமரர் என்றால் மரணத்தைக் கடந்தவர் என்று பொருள். உண்மையில் பாரதியார் மரணமடைந்து மறைந்து போகவில்லை.

இவர் இவருடைய பாடல்கள், மற்ற இலக்கியங்கள் மூலம் என்றும் சிரஞ்சீவியாக நம்முடன் வாழ்கிருர். இவருடைய உடம்பு மறைந்த பிறகே தமிழர்களும், மற்ற இந்தியர்களும் இவருடைய பெருமையை நன்கு உணர்ந்தார்கள்.

பாரதியாருடைய பாடல்கள் முழங்காத பேச்சு மேடையே அன்று இல்லை என்று சொல்லலாம். நாட்டிற்காக உழைத்த தொண்டர்களின் நாவில் பாரதியார் பாட்டே ஒலித்தது. பாரதியார் பாட்டைக் கேட்டவர்கள் ஆர்ப்பரித்து எழுந்தார்கள்.

அதனுல் ஆங்கிலேய அரசாங்கம் இவருடைய பாடல்களைப் பாடக்கூடாது என்று தடை உத்திரவு விதித்தது. பாரதியார் நூல்களையெல்லாம் பறிமுதல் செய்து எடுத்துக் கொண்டது.

இதனுல் பாரதியார் பாடல்கள் மறைந்து விடவில்லை. அதன் பிறகுதான் பாரதியாரின் பாடல்களின் சிறப்பைப் பலரும் உணரலாயினர். எல்லாரும் பாடத் தொடங்கினுர்கள். பாரதியார் பாடலுக்கு உள்ள பெரிய சக்தியை எல்லாரும் தெரிந்து பாராட்டினுர்கள்.

பாரதியார் பிறந்த ஊரில் இவர் நினைவாக பாரதி மண்டபம் கட்டினுர்கள். ஆண்டு தோறும் செப்டம்பர் 11 ஆம் தேதி தமிழ் நாடெங்கும் பாரதி விழாக் கொண்டாடினுர்கள். இன்றும் கொண்டாடுகிருர்கள். பாரதி சங்கம், பாரதி இளைஞர் சங்கம் என்று இப்படி இவர் பெயரால் பல சங்கங்கள் தோன்றியிருக்கின்றன. பாரதியாருடைய வாழ்க்கையைப் பற்றியும் இவருடைய நூல்களின் சிறப்பைப் பற்றியும் பல சிறந்த எழுத்தாளர்கள் தனித்தனி நூல்கள் எழுதியிருக்கிருர்கள். சென்னைக் கடற்கரையில் பாரதியாரின் சிலை வைக்கப்பட்டுள்ளது.

பாரதியார் சமூக சீர்திருத்தம் பற்றிப் பாடினுர் பெண்களுக்கு விடுதலே வேண்டும் என்று பாடினுர் தமிழ் நாட்டை மிகவும் புகழ்ந்து பாடினுர். தமிழ் மொழியை எங்கள் தமிழ்மொழி, எங்கள் தமிழ்மொழி என்று போற்றிப் பாடினுர். ஆனுல் அதே சமயத்தில் தமிழ்நாடு இந்திய நாட்டின் ஒரு பகுதி என்றும் பாடினுர். பாரததேசம் ஒரே நாடு என்றும் பாடினுர்.

பாரத சமுதாயம் வாழ்க என்று பாடினுர்.

முப்பதுகோடி ஜனங்களுக்கும் பொது உடமை பாரத தேசம் என்று பாடினுர்.

பாரத தேசத்தில் பலவேறு மொழிகள் பேசப்பட்டாலும் இந்த நாட்டின் சிந்தனே ஒன்று என்று பாடினுர்.

பாரதியார் பரந்த உள்ளம் படைத்தவர். இவருடைய கவிதைகள் மிகப் பெருமை வாய்ந்தவை. தமிழ் மக்கள் ஒவ்வொருவரும் முக்கியமாகப் படித்துப் பயன் பெற வேண்டியவைகளே எல்லாம் இவர் எழுதி நமக்கு அளித்திருக்கிருர்.

பாரதியாரைப் போற்றுவோம். இவருடைய நூல்களேப் படித்துப் பயன் பெறுவோம்.

வாழ்க பாரதி நாமம்.



# பாப்பாப் பாட்டு

பாரதியாரின் இரண்டாவது குழந்தைதான் சகுந்தலா. இக் குழந்தையைப் பாப்பா என்று செல்லமாக அழைப் பார்கள். இது அழுத போதுதான் பாரதியார் பாப் பாப் பாட்டு என்ற அழகான பாடலைக் குழந்தைகளுக் கென்றே பாடினர். இந்த விவரங்களையெல்லாம் முன்பே உங்களுக்குச் சொல்லியிருக்கிறேன்.

பாப்பாப் பாட்டைப் பற்றித் தனியாக எழுதுவதாக வும் சொல்லியிருக்கிறேன் அல்லவா? அதைத்தான் இப்போது செய்யப் போகிறேன்.

குழந்தைகள் எப்பொழுதும் துருதுருவென்று ஓடியும் ஆடியும் இருக்க வேண்டும். அது ஓய்வாகச் சோம்பேறி யாக இருக்கக் கூடாது. அது குழந்தைகளின் இயற்கை அல்ல.



அதனால் பாரதியார்,

ஓடிவிளையாடு பாப்பா — நீ
ஓய்ந்திருக்கலாகாது பாப்பா

என்ற பாப்பாப் பாட்டைத் தொடங்குகிறார்.

குழந்தைகள் ஒன்றோடொன்று சேர்ந்து விளையாடும். சில வேளைகளில் ஒரு குழந்தை மற்றொரு குழந்தையை வையத் தொடங்கும். அதனுடன் சண்டையும் போடும்.

பாரதியாருக்கு ஒரு குழந்தை மற்றொரு குழந்தையை வைதால் பிடிக்காது. அது நல்லதில்லை. குழந்தைப் பருவம் முதல்கொண்டு குழந்தைகள் சண்டையிட்டுக் கொள்ளாமல் கூடி விளையாடவும் மற்ற வேலைகளைச் செய்யவும் வேண்டும் என்பது பாரதியாரின் ஆசை. அதனால் ஓடிவிளையாடச் சொன்னவர் உடனே இதை யும் சொல்லுகிறார்.

ஓடி விளையாடு பாப்பா — நீ
ஓய்ந்திருக்கலாகாது பாப்பா
கூடி விளையாடு பாப்பா — ஒரு
குழந்தையை வையாதே பாப்பா

என்கிறார்.

## குழந்தை சின்னஞ் சிறு குருவியைப் போலே

குருவியைப் போலக் குழந்தை திரிந்து வரவேண்டுமாம். அழகான பறவைகளைக் கண்டு மகிழ்ச்சி அடைய வேண் டுமாம்.

கோழி இரைதேடிக் கொத்திக் கொத்தித் தின்று திரி கின்றது. காக்கை குழந்தை ஏமாந்த சமயம் பார்த்து

எத்தித் திருடுகின்றது. இப்படிப்பட்ட பறவைகளுக்கெல்லாம் இரக்கங்காட்ட வேண்டும். பாரதியாரே காக்கை குருவிகளுக்கு சமையலுக்காக வைத்திருக்கும் அரிசியை எடுத்துப் போட்டு விடுவாராம். இவரைப் போலவே பறவைகளிடம் அன்பாகக் குழந்தைகள் இருக்க வேண்டும் என்கிறார்.



சின்னஞ் சிறு குருவி போலே—நீ
திரிந்து பறந்து வா பாப்பா

வன்னப் பறவைகளைக் கண்டு—நீ
மனதில் மகிழ்ச்சி கொள்ளு பாப்பா

கொத்தித் திரியும் அந்தக் கோழி—அதைக்
கூட்டி விளையாடு பாப்பா

எத்தித் திருடுமந்தக் காக்கை—அதற்கு
இரக்கப்பட வேணும் பாப்பா

## பசு முதலிய விலங்குகளை ஆதரிக்க வேண்டும்

பசு நமக்குப் பால் தருகின்றது. நாய் அன்போடு வாலைக் குழைக்கிறது; வீட்டைக் காவல் புரிகின்றது. குதிரை வண்டியை இழுத்துக் கொண்டு வேகமாகச் செல்கின்றது. மாடு வயலில் உழுது நமக்கு உணவு தானியங்களைப் பயிர் செய்ய உதவுகின்றது. ஆட்டுக் குட்டி துள்ளிக் குதிக்கும் போது எவ்வளவு இன்பமாக இருக்கின்றது!; அது நம்மை அண்டிப் பிழைக்கும் சாது வான பிராணி. காந்தி அடிகள் ஆட்டின் பாலைத்தான் விரும்பிக் குடித்தார்.

இவ்வகையான விலங்குகளை எல்லாம் நாம் நன்றாகக் காப்பாற்ற வேண்டும் என்கிறார் பாரதியார்.

பாலைப் பொழிந்து தரும் பாப்பா — அந்த
பசுமிக நல்லதடி பாப்பா
வாலைக் குழைத்து வரும் நாய்தான் — அது
மனிதர்க்குத் தோழனடி பாப்பா.
வண்டி இழுக்கும் நல்ல குதிரை — நெல்லு
வயலில் உழுதுவரும் மாடு
அண்டிப் பிழைக்கும் நம்மை ஆடு — இவை
ஆதரிக்க வேணுமடி பாப்பா.

## காலை எழுந்ததுமுதல் மாலைவரை செய்ய வேண்டியவை

காலை எழுந்தவுடன் என்ன செய்ய வேண்டும்? பாரதி யார் சொல்வதைக் கவனமாகக் கேளுங்கள். காலைக் கடன்களை முடித்துக் கொண்டு முதலில் படிக்க வேண்டு மாம். காலையில்தான் நமது மூளை மிக நன்றாக வேலை

செய்யும். அதனுல் அந்த நேரத்தில் படிப்பது நல்லது. பிறகு பாட்டுப் பாடிப் பழக வேண்டுமாம்.

உடல் உறுதி வேண்டுமல்லவா? அதற்கு மாலை முழுவதும் விளையாடவேண்டுமாம். இதை நாள்தோறும் பழக்கத்தில் கொண்டு வருவது நல்லது. இளமையிலேயே ஒரு நல்ல பழக்கத்தை ஏற்படுத்திக் கொண்டால் பிறகு அது மாருது.

காலை எழுந்தவுடன் படிப்பு — பின்பு
கனிவு கொடுக்கும் நல்ல பாட்டு
மாலை முழுதும் விளையாட்டு — என்று
வழக்கப் படுத்திக் கொள்ளு பாப்பா.

# தெய்வம் நமக்குத் துணை

அரிச்சந்திரனுடைய கதை கேட்டிருக்கிறீர்களா? அவன் பொய்யே சொல்ல மாட்டானும். எவ்வளவோ துன்பம் வந்த காலத்திலும் அவன் பொய் சொல்லவே இல்லை. அவனுடைய அரசு போய் விட்டது. மற்ற செல்வங்களெல்லாம் போய் விட்டன. எத்தனையோ துன்பங்களை அவன் அனுபவித்தான். இருந்தாலும் பொய் சொல்லாமல் சத்தியத்தையே நம்பி வாழ்ந்தான். கடைசியில் வெற்றியும் அடைந்தான். அதனுல் அரிச்சந்திரனை உலகம் புகழ்கின்றது. அவனுடைய நினைவை என்றும் மக்கள் மறப்பதில்லை. அரிச்சந்திரனுடைய கதையை நாடகமாக நடிப்பார்கள். அப்படி ஒரு நாடகத்தைக் காந்தி அடிகள் இளமைப் பருவத்தில் பார்த்துத் தாமும் அரிச்சந்திரனைப் போலப் பொய்யே சொல்லக் கூடாது என்று உறுதியாக இருந்தார். அதனுல் காந்தி அடிகளை இன்று உலகம் போற்றிப் புகழ்கின்றது.

பாரதியார் பொய் சொல்லக் கூடாது; கோள் சொல்லக் கூடாது என்று மேலும் பாப்பாவுக்கு அன்போடு சொல்லுகிறார். பொய் சொல்லாமல் இருந்தால் யாதொரு தீங்கும் வராது. கடவுள் துணை செய்வார் என்கிறார்.

பொய் சொல்லக் கூடாது பாப்பா — என்றும்
புறஞ் சொல்ல லாகாது பாப்பா
தெய்வம் நமக்குத் துணை பாப்பா — ஒரு
தீங்கு வரமாட்டாது பாப்பா.

## பயம் கூடாது

யாராவது நமக்குப் பாதகமாக ஏதாவது செய்ய வந்தால் அதற்காக பயம் கொள்ளக் கூடாது. எதிர்த்து நிற்க வேண்டும். பாதகம் செய்பவர் முகத்தில் உமிழக் கூடிய தைரியம் இருக்க வேண்டும். பாரதியார் இந்த இடத்தில் கண்டிப்பாகவே சொல்லுகிறார். துன்பம் வந்தாலும் அதற்காக மனம் சோர்ந்து போகக் கூடாது. சோராமல் இருப்பதற்கு பாரதியாரின் வாழ்க்கையே நமக்கு எடுத்துக் காட்டாக விளங்குகிறது. இவர் எத்தனையோ துன்பங்களைப் பாண்டிச்சேரியில் அனுபவித்துக் கொண்டிருந்த போதிலும் மனம் சோராமல் இருந்து அழகான கவிதைகளையெல்லாம் நமக்குத் தந்திருக்கிறார் அல்லவா?

துன்பம் நெருங்கி வந்தபோதும் — நாம்
சோர்ந்து விடலாகாது பாப்பா
அன்பு மிகுந்த தெய்வமுண்டு — துன்பம்
அத்தனையும் போக்கிவிடும் பாப்பா.

# தேம்பி அழாதே: திடம் கொண்டு போராடு

நமக்குத் தொழில் கவிதை. நாட்டுக் குழைத்தல் இமைப்பொழுதும் சோராதிருத்தல் என்று பாரதியார் தமது தொழிலைப் பற்றிக் கூறியிருக்கிருரல்லவா? கவிதை எழுதுவதும், தாய் நாட்டிற்காக உழைப்பதும் இவர் தொழிலாம் — அதே சமயத்தில் சோர்வடையா மல் இருப்பதும் இவர் ஏற்படுத்திக் கொண்ட வாழ்க்கை நெறியாகும் பாரதியார் சோம்பலை வெறுத் தார். அது கெடுதியை உண்டாக்கும். அதனுல் நன்மை விளையாது. அதனுல்தான் ஓடிவிளையாடு பாப்பா — நீ ஓய்ந்திருக்கலாகாது என்று முதலிலேயே பாப்பாவுக்குச் சொல்லுகிருர். சோம்பல் மிகக் கெடுதி என்று மறு படியும் கூறுகிருர். தாய்தான் குழந்தைக்கு முதல் தெய்வம். தாயின் அன்புக்கு இணையாக வேறென்றை யும் சொல்ல முடியாது. அதனுல் தாயின் சொல்லைத் தட்டிப் பேசக் கூடாது.

சில குழந்தைகள் எதற்கெடுத்தாலும் அழத் தொடங்கிவிடும். சிரித்துக் கொண்டிருக்கிற குழந் தையை யாரும் அன்போடு அணைத்துக் கொள்வார்கள். ஆனுல் அழத் தொடங்கிவிட்டால் தந்தை கூட இந்தக் குழந்தையை எடுத்துக் கொண்டு போ என்று தாயிடம் சொல்லுவார்.

தேம்பி அழுகின்ற குழந்தை நொண்டி என்று குழந் தையைக் கேலி செய்கிருர் பாரதியார். குழந்தை உண்மையில் நொண்டியில்லை. தேம்பி அழுவதுதான் தவறு; அதனுல் அதை நொண்டிக்குழந்தை என்கிருர். குழந்தைப் பருவத்திலிருந்தே தைரியத்தோடு இருக்க

வேண்டும். எதற்கெடுத்தாலும் அழுதுகொண்டு கோழை யாக இருக்கக் கூடாது.



சோம்பல் மிகக் கெடுதி பாப்பா — தாய்
  சொன்ன சொல்லைத் தட்டாதே பாப்பா

தேம்பி அழுங் குழந்தை நொண்டி — நீ
  திடங் கொண்டு போராடு பாப்பா.

# தமிழ் நாடு தாய்; இந்தியா தெய்வம்

தமிழ் நாட்டைத் தாயென்று கும்பிடவேண்டும். அந்த மண்ணில்தான் குழந்தை பிறந்து ,விளையாடிக் களிக்கின்றது. ஆதலால் அது தாய்க்கு ஒப்பாகும். தமிழ் நாட்டில் வழங்கும் தமிழைத்தான் முதன் முதலில் குழந்தை பேசுகிறது. அதனால் அது குழந்தையின் தாய் மொழி. தமிழ் மிக உயர்ந்தது என்று பாப்பாவுக்கு பாரதியார் எடுத்துச் சொல்லுகிறார்.

ஆனால் அதே சமயத்தில் நமது முன்னோர்கள் வாழ்ந்த நாடாகிய இந்தியாவை மறந்து விடக் கூடாது. இந்தியாவை மறந்து விட்டுத் தமிழ் நாட்டை மட்டும் நினைத்துக் கொண்டிருக்கக் கூடாது. அது குறுகிய எண்ணம். ஆதலால் இந்தியாவை மறந்து விடுவது தவறு. இந்தியா நமது தேசம். அதன் குழந்தைகள் நாம்.

இந்தியாவின் வடக்கில் இமயமலை இருக்கின்றது. அதைப் போன்ற உயரமான மலை உலகத்தில் வேறெங்கும் கிடையாது. தெற்கிலே கன்னியாகுமரி இருக்கின்றது. மற்ற இரண்டு திசைகளிலும் பரந்த கடல். இவற்றின் மத்தியில் இந்தியா என்ற ஒப்பற்ற நாடு நமது முன்னோர்களின் நாடாகவும், நமது நாடாகவும் விளங்குகின்றது.

இங்குதான் உலகத்தார் புகழும் வேதம் படைத்த முனிவர்களும் ரிஷிகளும வாழ்ந்தார்கள். பெரியபெரிய வீரர்கள் இந்த மண்ணில் தோன்றி யிருக்கிறார்கள். ஆதலால் இது நமது தாய் நாடு. தாயைத் தெய்வமென்று போற்றுவதைப் போல இந்தியாவையும்போற்ற வேண்டும். தமிழ்நாடு நம்மைப் பெற்ற தாய். அதே

சமயத்தில் இந்தியா நமது தெய்வம். இவற்றை மறந்து விடக் கூடாது என்கிருர் பாரதியார்:

தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற — எங்கள்
தாயென்று கும்பிடடி பாப்பா
அமிழ்தில் இனியதடி பாப்பா — நம்
ஆன்ருேர்கள் தேசமடி பாப்பா.
சொல்லில் உயர்வு தமிழ்ச் சொல்லே — அதை த
தொழுது படித்திடடி பாப்பா
செல்வம் நிறைந்த ஹிந்துஸ்தானம் — அதைத்
தினமும் புகழ்ந்திடடி பாப்பா.
வடக்கில் இமயமலை பாப்பா — தெற்கில்
வாழும் குமரி முனை பாப்பா
கிடக்கும் பெரிய கடல் கண்டாய் — இதன்
கிழக்கிலும் மேற்கிலும் பாப்பா.
வேதமுடைய திந்த நாடு — நல்ல
வீரர் பிறந்த திந்த நாடு
சேதமில்லாத ஹிந்துஸ்தானம் — இதைத்
தெய்வமென்று கும்பிடடி பாப்பா.

## சாதிகள் இல்லை

சாதி நூறு சொல்லுவாய் போ போ என்று பாரதியார் கோபத்தோடு வேருெரு பாட்டிலே சொல்லி யிருக்கிருர். சாதிப் பிரிவினையால்தான் நமது நாடு தனது சிறப்பை இழந்தது. எல்லாரும் சமம் என்கின்ற உணர்ச்சி வந்து விட்டால் இந்தியா வலிமை மிகுந்த நாடாகிவிடும்.

எந்தக் காலத்திலோ ஏற்பட்ட சாதிப் பிரிவினை இந்தக் காலத்திற்குப் பொருந்தாது. இந்தியர்கள் அனைவரும் ஒரே சாதி. ஒரே குலம். இதைத்தான் குழந்தைப் பருவம் முதல் கற்றுக் கொள்ள வேண்டும். பிறப்பினால் சாதி வேற்றுமை இருக்கக் கூடாது என்கிறார் பாரதியார்.

உலகத்தில் சாதியென்றால் அவை இரண்டேதான் என்று இருக்க வேண்டும். ஔவைப் பாட்டி இதைத் தான் சொன்னார்.

சாதி இரண்டொழிய வேறில்லை என்றே
தமிழ் மகள் சொல்லிய சொல் அமிழ்தமென்போம்

என்று பாரதியார் வேறொரு பாட்டில் பாடி இருக்கிறார்.

நீதி, உயர்ந்த அறிவு, கல்வி, அன்பு இவற்றை நிறையக் கொண்டிருப்பவர்கள் மேலோர். இவர்கள் உயர்ந்தவர்கள். இவை இல்லாதவர்கள் தாழ்ந்தவர்கள். இந்த இரண்டே பிரிவுகள் வேண்டுமானால் இருக்கலாம். என்கிறார் பாரதியார். பிறப்பால் உயர்ந்தவன் தாழ்ந்தவன் என்று யாரையும் சொல்லக் கூடாது. அப்படிச் சொல்வது பாவம் என்று நாம் கருதவேண்டும்.

எல்லா உயிர்களிடத்திலும் அன்பு இருக்க வேண்டும். அத்துடன் கடவுள் உண்டு என்றும் நம்பவேண்டும். அறிவே தெய்வம் என்கிறார் பாரதியார். அன்பே தெய்வம் என்றும் சொல்லுகிறார்.

ஏதோ ஒரு சக்தி இருக்கிறது. அது அறிவு மயமானது. அது அன்பு மயமானது. அது உலகத்தை நடத்துகின்றது. அதைத்தான் வெவ்வேறு பெயரிட்டு நாம் அழைக்கின்றோம். ஆனால் அந்த தெய்வம் ஒன்றே

தான். எந்தப் பெயர் சொல்லி அழைத்தாலும் அந்த தெய்வம் நமக்கு அருள் செய்யும். தண்ணீரை ஜலம் என்று சொல்லுவார்கள்; வாட்டர் என்று ஆங்கிலத்தில் சொல்லுவார்கள். எந்தப் பெயராக இருந்தாலும் தண்ணீர் ஒன்று தான். அதைப் போலவே எந்தப் பெயர் சொன்னாலும் தெய்வம் ஒன்றுதான்.

வயிரம் மிகக் கெட்டியானது அல்லவா? அதைக் கொண்டு கண்ணாடியைக் கூட அறுத்து விடமுடியும். அப்படி வைரம் போன்ற தைரியம் உள்ள மனம் நமக்கு இருக்க வேண்டும். அப்படி உறுதியுள்ள நெஞ்சமுடையவன் வாழ்க்கையில் வெற்றி பெறுவான் என்கிறார் பாரதியார்.

சாதிகள் இல்லையடி பாப்பா — குலத்
தாழ்ச்சி உயர்ச்சி சொல்லல் பாவம்
நீதி, உயர்ந்த மதி, கல்வி — அன்பு
நிறைய உடையவர்கள் மேலோர்.

உயிர்களிடத்தில் அன்பு வேணும் — தெய்வம்
உண்மையென்று தானறிதல் வேணும்
வயிர முடைய நெஞ்சு வேணும் — இது
வாழும் முறைமையடி பாப்பா.

இப்படி வாழ்வதுதான் முறை என்று பாரதியார் பாப்பாப் பாட்டை முடிக்கிறார்.

பாரதியார் தமது செல்லக் குழந்தைக்குச் சொல்வது போல எல்லாக் குழந்தைகளுக்கும் பல சிறந்த நீதிகளை இந்தப் பாட்டில் கூறியிருக்கிறார். இப்படிக் குழந்தைப் பருவம் முதற் கொண்டே நம் நாட்டுக் குழந்தைகள் உயர்ந்த எண்ணங்களைக் கொண்டு வளரவேண்டும் என்று அவர் ஆசைப்படுகிறார்.

பாப்பாப் பாட்டு ஒரு அருமையான பாட்டு. இதை நீங்கள் நன்முக மனதில் வைத்துக் கொள்ள வேண்டும்.

இந்தக் காலத்தில் பாரதியாரை எல்லாரும் கொண்டாடுகிருர்கள். தமிழ் நாட்டைத் தட்டி எழுப்பிய பாரதியாருக்கு நாமும் நன்றி செலுத்த வேண்டாமா?

முதலில் பாப்பாப் பாட்டைக் கற்றுக் கொள்ளுங்கள். அதன்படி நடக்கப் பழகுங்கள். அதுவே பாரதியாருக்கு நாம் செலுத்தும் சிறந்த நன்றியாகும்.

பாப்பாப் பாட்டைச் சிறுசிறு பகுதிகளாக இதுவரை பார்த்தோம். அதை முழுவதும் மனப்பாடம் செய்ய எளிதாக இருக்கும்படி ஒன்ருகச் சேர்த்து இங்கு கொடுக்கிறேன்.

## பாப்பாப் பாட்டு

ஓடி விளையாடு பாப்பா!—நீ
ஓய்ந்திருக்க லாகாது பாப்பா!
கூடி விளையாடு பாப்பா!—ஒரு
குழந்தையை வையாதே பாப்பா...... 1

சின்னஞ் சிறுகுருவி போலே—நீ
திரிந்து பறந்துவா பாப்பா!
வன்னப் பறவைகளைக் கண்டு—நீ
மனதில் மகிழ்ச்சி கொள்ளு பாப்பா!...... 2

கொத்தித் திரியுமந்தக் கோழி—அதைக்
கூட்டி விளையாடு பாப்பா!
எத்தித் திருடுமந்தக் காக்கை—அதற்கு
இரக்கப் படவேணும் பாப்பா!...... 3

பாலைப் பொழிந்து தரும் பாப்பா!—அந்தப்
பசுமிக நல்லதடி பாப்பா,
வாலைக் குழைந்துவரும் நாய்தான்—அது
மனிதர்க்குத் தோழனடி பாப்பா!...... 4

வண்டி இழுக்கும் நல்ல குதிரை—நெல்லு
வயலில் உழுதுவரும் மாடு,
அண்டிப் பிழைக்கும் நம்மை ஆடு,—இவை
ஆதரிக்க வேணுமடி பாப்பா!...... 5

காலை எழுந்தவுடன் படிப்பு—பின்பு
கனிவு கொடுக்கும் நல்ல பாட்டு;
மாலை முழுதும் விளையாட்டு—என்று
வழக்கப் படுத்திக் கொள்ளு பாப்பா!...... 6

பொய் சொல்லக் கூடாது பாப்பா!—என்றும்
புறஞ்சொல்ல லாகாது பாப்பா!
தெய்வம் நமக்குத் துணை பாப்பா!—ஒரு
தீங்குவர மாட்டாது பாப்பா!...... 7

பாதகஞ் செய்பவரைக் கண்டால்—நாம்
பயங்கொள்ள லாகாது பாப்பா!
மோதி மிதித்துவிடு பாப்பா!—அவர்
முகத்தில் உமிழ்ந்துவிடு பாப்பா!...... 8

துன்பம் நெருங்கிவந்த போதும்—நாம்
சோர்ந்துவிட லாகாது பாப்பா!
அன்பு மிகுந்த தெய்வ முண்டு—துன்பம்
அத்தனையும் போக்கிவிடும் பாப்பா!...... 9

சோம்பல் மிகக் கெடுதி பாப்பா!—தாய்
சொன்ன சொல்லைத் தட்டாதே பாப்பா!
தேம்பி யழுங்குழந்தை நொண்டி—நீ
திடங்கொண்டு போராடு பாப்பா!...... 10

தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற—எங்கள்
தாயென்று கும்பிடடி பாப்பா!
அமிழ்தில் இனியதடி பாப்பா!—நம்
ஆன்றோர்கள் தேசமடி பாப்பா!...... 11

சொல்லில் உயர்வு தமிழ்ச் சொல்லே;—அதைத்
தொழுது படித்திடடி பாப்பா!
செல்வம் நிறைந்த ஹிந்துஸ்தானம்—அதைத்
தினமும் புகழ்ந்திடடி பாப்பா!...... 12

வடக்கில் இமயமலை பாப்பா!—தெற்கில்
வாழும் குமரிமுனை பாப்பா!
கிடக்கும் பெரிய கடல் கண்டாய்—இதன்
கிழக்கிலும் மேற்கிலும் பாப்பா!...... 13

வேத முடையதிந்த நாடு—நல்ல
வீரர் பிறந்த திந்த நாடு;
சேதமில்லாத ஹிந்துஸ்தானம்—இதைத்
தெய்வமென்று கும்பிடடி பாப்பா!...... 14

சாதிகள் இல்லையடி பாப்பா!—குலத்
தாழ்ச்சி உயர்ச்சி சொல்லல் பாவம்!
நீதி, உயர்ந்தமதி கல்வி—அன்பு
நிறைய உடையவர்கள் மேலோர்...... 15

உயிர்க ளிடத்தில் அன்பு வேணும்;—தெய்வம்
உண்மையென்று தானறிதல் வேணும்;
வயிர முடைய நெஞ்சு வேணும்—இது
வாழும் முறைமையடி பாப்பா!...... 16